# வரலாற்றெழுத்தின் வரையறைகள்

## ஜெயமோகன்



## *[1]*

***நாம் வரலாற்றை எப்படி எழுதிக்கொள்கிறோம்?***

*நான் எழுதிய 'ஈராறு கால்கொண்டெழும் புரவி' குறுநாவலில் ஒரு காட்சி வரும். ஓரு சித்தர் ஞானமுத்தன் என்ற விவசாயியை ஒரு ஒரு மலைவிளிம்பில் நிறுத்தி அவனிடம் கீழே பார்க்கச் சொல்வார் 'மண் மீதுள்ள வாழ்க்கை என்பது நீரின் ஒரு தோற்றம் மட்டும்தான்' என்பார். ஞானமுத்தன் குழம்புவான். சட்டென்று அவன் கால்நழுவ அவன் அள்ளி எதையோ பிடித்துக்கொண்டு தப்புவான். அந்த அதிர்ச்சிக்கணத்தில் அவன் ஒருகணத்தில் எல்லாவற்றையும் உணர்ந்துகொள்வான்*

*அவன் கீழே பார்ப்பான். விரிந்துகிடக்கும் மண் முழுக்க நீரினால் வரையப்பட்ட ஒரு கோலமாக தெரியும். நிலத்தடி நீரின் ஓட்டம் மேலே முளைத்திருக்கும் மரங்களின் பசுமையாலேலேயே ஒரு பெரும்நதிபோல பல்வேறுகிளைகளுடன் தெரியும். அந்த பிரமையில் அவன் நடக்கும்போது பறவைகளின் ஒலியை கேட்பான். அதில் நீரின் வரைபடம் இருப்பதைக் காண்பான். அதன்பின் அவன் பூமிமீதான வாழ்க்கையையே நீரின் விளையாட்டாகக் காண ஆரம்பிப்பான்.*

*இரண்டுநாட்களுக்கு முன்னர் ஒரு தலித்திய ஆய்வாளருடன் பேசிக்கொண்டிருந்தேன். அவர் பணியாற்றிவரும் அதே ஆய்வுநிறுவனத்தைச் சேர்ந்த இன்னொரு ஆய்வாளர் எழுதிய கட்டுரை ஒன்றைப்பற்றி அவர் குறிப்பிட்டார். தமிழகத்தில் உள்ள கொங்குவட்டாரம் எனப்படும் கோவை ஈரோடு நாமக்கல் கரூர் பகுதிகள் இன்று தமிழகத்திலேயே அதிகமான தொழில்வளம் கொண்டவை. அவ்வாறு தொழில்கள் சிறக்க என்ன காரணம் என்று அந்த ஆய்வாளர் ''ஆராய்ந்து'' எழுதிய கட்டுரையைப்பற்றி இவர் சொன்னார். 'கொங்குபகுதியில் உள்ள கொங்குக் கவுண்டர்கள் கடுமையான உழைப்பாளிகள், சிக்கனமானவர்கள், வாழ்க்கையில் முன்னேறவேண்டும் என்ற துடிப்பு கொண்டவர்கள், ஆகவேதான் அங்கே தொழில்வளம் ஓங்கியிருக்கிறது' என்பது அந்த ஆய்வாளரின் முடிவாம்.*

*‘என்ன அபத்தம் இது, இப்படிக்கூடவா ஆய்வுகள் வருகின்றன!’’ என்றேன். ‘ஆமாம், ஆனால் இந்த ஆய்வு இந்தியாவின் முக்கியமான ஆய்விதழில் வெளியாகியிருக்கிறது’ என்றார் நண்பர். தமிழில் பெரும் நிதியுதவிகளுடன் நடத்தப்படும் கல்வித்துறை ஆய்வுகளில் மிகப்பெரும்பாலானவை ஒரு தரமான வாசகனால் புரட்டிப்பார்க்கும் தகுதிகூட அற்றவை என நான் அறிவேன். ஆனாலும் இந்த ஆய்வு கொஞ்சம் மனம்குன்ற வைத்தது*

*இந்த வரலாற்றாய்வின் பிரச்சினை என்ன? இது வெறும் சாதியநோக்கு என்பது ஒருபக்கம். வரலாற்றாய்வின் முறைமை என்று பார்த்தால்கூட இது மிகப்பெரிய குறைபாடுகள் கொண்டது. நூற்றுக்கணக்கான அடிக்குறிப்புகளுடன், வரலாற்றாய்வுக்கட்டுரைகளுக்குரிய வழக்காறுகளும் கலைச்சொற்களும் மலிந்த நடையுடன், நாலைந்து கல்வித்துறைப்பட்டங்கள் கொண்ட ஒருவரால் முக்கியமான ஆய்விதழ் ஒன்றில் எழுதப்பட்டிருந்தால் மட்டும் ஒரு எழுத்து ஆய்வுக்கட்டுரையாக ஆகிவிடாது. டீக்கடைப்பெரிசுகளின் பேச்சுக்களைப்போன்ற பாமரத்தனமான ஒரு பார்வைதான் இது.*

***வரலாற்றாய்வாளர்கள், வரலாற்றாசிரியர்கள், வரலாறு:***

*வரலாறை எழுதும் அறிவுச்செயல்பாட்டை இரண்டு பெரும் பிரிவுகளாகப்பிரிக்கலாம். தரவுகளைச் சேகரித்து தொகுத்துப் பதிவுசெய்தல் முதல் கட்டம். அந்தத் தளத்தில்தான் வரலாற்றாய்வாளர்களில் பெரும்பாலானவர்கள் பணியாற்றுகிறார்கள். களஆய்வுகள், தொல்லியல்ஆய்வுகள், மொழிச்சான்றுகளை ஆராய்தல், சான்றுப்பொருட்களை அறிவியல்முறைப்படி ஆராய்ந்து தகவல்களைப் பதிவுசெய்தல், தரவுகளை ஒப்பிட்டுப் பதிவுசெய்தல் போன்ற பெரும்பணிகள் அந்தத் தளத்தில் உள்ளன. அவை இல்லாமல் வரலாற்றாய்வு இல்லை.இப்பணிகளைச் செய்பவர்களை வரலாற்றாய்வாளர்கள் எனலாம்.*

*இரண்டாம் கட்டம் என்பது தரவுகளில் இருந்து வரலாற்றை எழுதுவது. வரலாற்றெழுத்து [historiography] என்று இதைச் சொல்கிறார்கள். இதைச்செய்பவர்களை வரலாற்றாசிரியர்கள் என்று சொல்லலாம். வரலாற்றை தரவுகளில் இருந்து தொகுத்தும் இடைவெளிகளை ஊகித்தும் எழுதுபவர்கள் இவர்கள். இவர்கள் ஒருவரோடொருவர்*

*முரண்பட்டு விவாதித்தும் ஒருவரை ஒருவர் முழுமைசெய்துகொண்டும் உருவாக்குவதே வரலாறு என்னும் பொதுவான கடந்தகாலச் சித்தரிப்பு.*

***வரலாற்றெழுத்து:***

*வரலாற்றெழுத்து என்பது வரலாறு என்று வரையறுக்கப்பட்டுள்ள அறிவுத்துறைக்குள் மட்டும் நின்றுவிடக்கூடிய ஒரு செயல்பாடாக இருக்கமுடியாது. முதன்மையான வரலாற்றாசிரியர்கள் அனைவருமே பல்வேறு அறிவுத்துறைகளை இணைத்துக்கொண்டு மனிதவாழ்க்கை என்னும் பெரும் சித்திரத்தை உருவாக்க முயல்பவர்களாகவே இருக்கிறார்கள் என்பதைக் காணலாம். அவர்களின் நோக்கம் வெறுமே புறவயமான தரவுகளை அடுக்கி வைப்பது அல்ல. அவற்றைக் கொண்டு மானுட வாழ்க்கைப்பரிணாமத்தைப் புரிந்துகொள்வதும்கூடத்தான்.*

*அவ்வாறு வரலாற்றை எழுதும்போது அன்று சாத்தியமான எல்லா கோணங்களையும் அதற்காகப் பரிசீலிக்கும் வரலாற்றாசிரியர்களே தகுதியான வரலாற்றாய்வை எழுதுகிறார்கள். வரலாற்றெழுத்தின் தொடக்க காலகட்டத்தில் இலக்கியம், மதம் சார்ந்த தகவல்களை தொல்லியல்சான்றுகளுடன் இணைத்து ஆராயும் வழக்கமிருந்தது. இந்த கோணம்தான் இன்று செவ்வியல் வரலாற்றெழுத்து எனப்படுகிறது.*

*அதன்பின்னர் சமூகவியல் தரவுகளையும் கருத்தில்கொண்டு ஆராயும்போக்கு உருவாகி வந்தது. அதன்பின்னர் அரசியல், பொருளியல் கோணங்களும் வரலாற்றெழுத்துக்கு முக்கியமானவை என்ற எண்ணம் உருவாகியது. இந்தக்கோணத்தை இந்திய வரலாற்றெழுத்தில் அழுத்தமாக நிறுவிய முன்னோடி டி.டி.கோசாம்பி. இன்று நிலவியல் சார்ந்த பார்வைகள் வரலாற்றாய்வில் பெரும்பங்கு வகிக்கின்றன.*

*மேலே சொன்ன கொங்கு வட்டார 'ஆய்வின்' சிக்கல் இதுதான். அது இத்தகைய பிறதுறைகள் சார்ந்த எந்தப் பார்வையும் இல்லாமல் மிகமிகக்குறுகிய பார்வையுடன் முன்முடிவுகளுடன் அவ்விஷயத்தை அணுகுகிறது. ஓரளவு வரலாறு தெரிந்தவர்களுக்கே கொங்குமண்டலத்தின் வளர்ச்சியின் கதை தெரியும்.*

*நிலவியல் நோக்கில் பார்த்தால் கொங்குவட்டாரம் பெரும்பாலும் வரண்ட வளமற்ற மண் கொண்ட மேட்டுநிலமாகவே இருந்துள்ளது. அங்கு ஓடும் முக்கியமான ஆறு என்றால் பவானி மட்டுமே. ஆற்றங்கரைகளில் மட்டுமே நிலையான குடியிருப்புகள் உள்ளன. மீதி நிலம் முழுக்க நூறாண்டுகளுக்கு முன்பு வரைக்கும்கூட மேய்ச்சல்நிலமாகவே இருந்திருக்கிறது. கொங்குப்பகுதியின் பண்பாடே மேய்ச்சல்சார்ந்ததுதான்.*

*சமூகவியல் நோக்கில் பார்த்தால் கொங்குவட்டாரத்தில் தொடர்ச்சியாக வேறுநிலங்களில் இருந்து மக்கள் குடியேறிக்கொண்டே இருந்திருக்கிறார்கள் என்பதைக் காணலாம். அங்குள்ள அத்தனை சாதியினரும் அங்கே குடியேறியவர்கள் என்றுதான் குலவரலாறு சொல்வார்கள். கொங்குக்கவுண்டர்கள் காவேரிப்பூம்பட்டினத்தில் இருந்து வந்தவர்கள் என்பார்கள். நாயக்கர்களும் அருந்ததியரும் ஆந்திராவிலிருந்து குடியேறியவர்கள். அப்பகுதியின் பூர்வகுடிகள் வேட்டுவர்கள்தான். பல ஊர்கள் வேட்டுவர்களுக்குரியவை என்பதையும் சிறிய வேட்டுவ அரசுகள் பதினைந்தாம் நூற்றாண்டுவரை அங்கிருந்தன என்பதையும் காணலாம்.*

*குடியேறிய மக்கள் அங்கே நிலத்தைப் பண்படுத்தி மழைவந்தால் மட்டும் ஒருபோகம் புஞ்சைத்தானியங்களை விளைவித்துக்கொண்டிருந்தனர். கணிசமான நிலம் மேய்ச்சல்நிலமாகவே எஞ்சியிருந்தது. 1770 லும் 1880லும் வந்த மாபெரும் பஞ்சங்களில் மிக அதிகமாக இறந்த தமிழக நிலப்பகுதி கொங்குமண்டலம் என்பதை வெள்ளைய ஆவணங்கள் காட்டுகின்றன. அரைப்பாலைவனவாழ்க்கையே அங்கே இருந்தது.*

*நூறாண்டுகளுக்கு முந்தைய சுயசரிதைகளில்கூட அப்பகுதியில் மிகமிக எளிய உணவுமுறை இருந்ததை நாம் காணலாம். ராஜாஜியின் அரசியல்மாணவரான தி.சே.சௌ.ராஜன் அவரது சுயசரிதையில் ஊறவைத்த புளியங்கொட்டை எப்படி முதன்மை உணவாக இருந்தது என்பதைப் பதிவுசெகிறார். ஆர்.ஷண்முகசுந்தரம்போன்ற கொங்குப்பகுதி எழுத்தாளர்களின் படைப்புகளையெல்லாம் வாசித்து ஆராய வேண்டிய தளம் இது.*

*இச்சூழலில்தான் கொங்குவட்டாரத்தில் பருத்திமில்கள் வர ஆரம்பித்தன. 1896 ல் கோவையின் முதல் பஞ்சாலையான ஸ்டேன்ஸ் மில் ஆரம்பிக்கப்பட்டது. அவை அங்கே வருவதற்கான காரணங்கள் மூன்று. அப்பகுதி வரண்ட நிலம். வரண்டநிலமே பருத்திவேளாண்மைக்கு ஏற்றது. ஆகவே சுற்றுவட்டாரத்தில் பருத்திவேளாண்மை ஊக்குவிக்கப்பட்டது. இரண்டு, ஈரப்பதம்கொண்ட காற்று இருந்ததனால்*

*பருத்திநூல்களை அது பாதிப்பதில்லை. மூன்றாவதும் முக்கியமானதுமான காரணம், பஞ்சத்துக்குப்பின் மலிவுக்கூலியில் ஏராளமான வேலையாட்கள் கிடைத்தார்கள்*

*இந்தியா சுதந்திரம் பெற்றபின் கொங்குவட்டாரத்தைச்சேர்ந்த சி.சுப்ரமணியம் காங்கிரஸ் அரசில் முக்கியமான பதவிகள் வகித்தார். அவரது முதன்மை முயற்சியில் கொங்குவட்டாரத்தைச் சுற்றி முக்கியமான அணைகள் சில வந்தன. பரம்பிக்குளம்-ஆழியார் அணைக்கட்டுகள் கேரளத்தில் உள்ள பரம்பிக்குளம் ஆற்றிலிருந்து நீரை ஓர் ஒப்பந்தம் மூலம் பெற்று கொங்குவட்டாரத்துக்குக் கொண்டுவந்தன. பத்துக்கும் மேற்பட்ட அணைகள் கொண்ட ஒரு மாபெரும் திட்டம் இது. அமராவதி அணை,பவானிசாகர் அணை, குந்தா அணை போன்ற பெரிய அணைகளும் இருபத்தைந்துக்கும் மேற்பட்ட சிறிய அணைகளும் இப்பகுதியில் நீரைக் கொண்டு வந்தன.*

*தமிழகத்தில் காங்கிரஸ் ஆட்சிக்காலத்தில் மிக அதிகமாக பாசனவசதியை அடைந்தது கொங்குமண்டலமே. இந்த அணைகளின் நீர்தான் கொங்குப்பகுதியை மிகப்பெரிய வேளாண்மண்டலமாக ஐம்பது அறுபதுகளில் மாற்றியது. கொங்குப்பகுதியின் வளர்ச்சி அங்கிருந்துதான் ஆரம்பிக்கிறது. தமிழக அரசியல்வரலாற்றுடன் இணைத்துப்பார்க்கவேண்டிய விஷயம் இது*

*அந்த வளர்ச்சியின் தோற்றத்தை ஆராய நமக்கு மார்க்ஸியநோக்குள்ள பொருளியல் ,அரசியல் அணுகுமுறை சற்றேனும் தேவை. பொதுவாக பாரம்பரியமாகவே நீர்வசதியுள்ள நிலப்பகுதிகளில் மக்கள் நெருக்கமாக வாழ்வார்கள். அங்கே ஒவ்வொருவரிடமும் நிலம்குறைவாகவே இருக்கும். அந்நிலப்பகுதிகளில் விளைச்சல் அதிகமாக இருந்தாலும் ஒவ்வொரு குடும்பமும் ஈட்டும் வருமானத்தில் நுகர்வுபோக உபரி அதிகம் இருப்பதில்லை.*

*வரண்ட நிலங்களில் மண்ணுக்கு மதிப்பில்லை என்பதனால் ஒவ்வொருவரும் ஏராளமான நிலத்தைக் கைவசம் வைத்திருப்பார்கள். அங்கே நீர்வசதி உருவாகி அவை விளைநிலமாகும்போது அவர்கள் அதிகமான விளைநிலம்கொண்ட பெருவிவசாயிகளாக ஆகிவிடுகிறார்கள். ஒவ்வொரு குடும்பத்துக்கும் அதிகநிலம் இருப்பதனால் உபரிவருமானம் அதிகம். அது சேமிப்பாகிறது. பின்பு முதலீடாக ஆகிறது. ஒருகட்டத்தில் அந்த முதலீடு தொழில்துறைக்கு திரும்புகிறது.*

கோவைப்பகுதிகளில் ஏற்கனவே மில்தொழில் இருந்தமையால் சுதந்திரத்துக்குப்பின் உருவான விவசாய உபரி முதலீடாக மாறி பருத்திசார்ந்த தொழில்களுக்குச் சென்றது. அங்கிருந்து மேலும் உபரியை உருவாக்கி முதலீடாக்கிக்கொண்டு கடைசல் முதலிய தொழில்களுக்குச் சென்றது.

தெலுங்குகங்கா திட்டம் வந்தபின் சென்ற இருபதாண்டுகளில் ஆந்திரத்தில் ராயலசீமாவின் வரண்ட நிலங்கள் முழுக்க விளைநிலங்களாக மாறின. அவை புதிய நிலப்பிரபுக்களை உருவாக்கின. அவர்கள் ஈட்டிய உபரி தொழில்துறைகளுக்குப் பாய்ந்து புதிய தொழில்கள் உருவாகின. அதற்கு முன்பு நாகார்ஜுனசாகர், பக்ரா நங்கல் அணைக்கட்டுகளாலும் இத்தகைய மாற்றம் உருவானது. விரிந்த பொருளியல் தரவுகளுடன் ஆராயவேண்டியது இது

கண்டிப்பாக ஒரு வட்டார மக்களின் ஊக்கமும் உழைப்பும் அதன் வளர்ச்சியில் பெரும்பங்கு வகிக்கின்றன. இந்தியாவில் பொதுவாக வரண்ட சூழலில் வாழ்ந்த பாரம்பரியமுள்ள மக்கள் கடுமையான சூழல்களில் போராடி வாழ்ந்த காரணத்தால் கடுமையான உழைப்பாளிகளாகவும் போராடிவாழக்கூடியவர்களாகவும் புதியனவற்றை செய்துபார்க்கக்கூடியவர்களாகவும் இருப்பதைக் காணலாம். குஜராத்தி பட்டேல்கள் ராஜஸ்தானிய மார்வாரிகள் ஆகியோர் உதாரணம். அப்பண்புகளை கொங்குவட்டார மக்களிடமும் நாம் காணலாம். சமூகவியல் கோணத்தில் ஆராயவேண்டிய ஒரு தளம் இது.

இவ்வாறு அனைத்துகோணங்களிலும் செய்யப்படும் ஒரு சமநிலைகொண்ட ஆய்வே பயனுள்ள பார்வையை முன்வைக்கமுடியும். அதுவன்றி சாதி சார்ந்த, மதம்சார்ந்த, இனம் சார்ந்த கோணங்களில் செய்யப்படும் ஆய்வுகளுக்கு எந்த மதிப்பும் இல்லை. வெறும் ஊகங்களை முன்வைப்பதும் ஏதேனும் ஒரு விஷயத்தைத் தூக்கிப்பிடிப்பதும் வரலாற்றெழுத்தை உண்மையை திரிக்கும் செயல்பாடுகளாகவே மாற்றிவிடும். மேலே நான் சொன்ன ஆய்வு அத்தகைய ஒன்றுதான்.

நமக்கு ஆய்வுக்கு இன்று தேவையாக உள்ளது முழுமையான பார்வை. இங்கே மிகமிகக்குறைவாக இருப்பதும் அதுவே. வரலாற்றாய்வை நம்முடைய குறுகிய பற்றுகள் விளையாடும் ஓர் உணர்ச்சிகரமான களமாக, நம் அரசியல்களுக்குத் தேவையான முன்முடிவுகளை அளிக்கும் ஒரு பின்புலமாக மட்டுமே நாம் இன்று கையாள்கிறோம். எந்த ஒரு வரலாற்றெழுத்தையும் சமகாலத்தைய பிற சமூகஅறிவியல் துறைகளின்

கோணங்கள் அனைத்தையும் பயன்படுத்திக்கொண்டு ஆராய்ந்து எழுதுவோமென்றால் மட்டுமே நாம் இந்தச் சிக்கலைத் தாண்டமுடியும்

வரலாற்றெழுத்து என்பது வரலாற்றுத்தரவுகளின் வழியாக மானுடத்தை இயக்கும் அடிப்படை விதிகளைக் கண்டடையும் வரலாற்றுத்தரிசனம்தான். ஞானமுத்தன் மண்ணில் நீரின் ஆடலை கண்டறிந்ததுபோன்ற ஒன்று அது.

## *[2]*

***இந்திய வரலாற்றெழுத்தின் வரலாறு***

*வரலாறு என்று நாம் சொல்வது சென்றகாலத்தில் நடந்தவற்றின் வரிசையை அல்ல. மாறாக சென்றகாலத்தில் நடந்தவற்றில் இருந்து நாம் இன்று வரிசைப்படுத்தி எழுதிக்கொள்பவற்றைத்தான்.அதாவது ஒரே சமூகம் வெவ்வேறு காலகட்டத்தில் தனக்கு வெவ்வேறு வரலாறுகளை எழுதிக்கொள்கிறது. நாம் இன்று தமிழ் வரலாறு என்று முன்வைக்கும் வரலாற்று வடிவமானது பதினெட்டாம் நூற்றாண்டில் உருவாக்கப்பட்டது.*

*நம்மிடம் தொல்வரலாறு இருக்கவில்லையா என்ன? இருந்தது, ஆனால் நவீனவரலாறு என நாம் சொல்வது முற்றிலும் வேறு. பழமையான வரலாறுகளுக்கும் நவீன வரலாற்றுக்கும் உள்ள வேறுபாடு என்ன?*

*நவீன அரசியல்தேசியம் பற்றிய பிரக்ஞை நமக்கு பதினெட்டாம்நூற்றாண்டுக்குப்பின்னரே உருவானது. இந்தியா என்றும் தமிழகம் என்றும் அதன்பின்புதான் நாம் அடையாளப்படுத்திக்கொள்ள ஆரம்பித்தோம். அவ்வாறு அரசியல்தேசிய அடையாளங்களும் அதையொட்டிய நிலவியல் எல்லைகளும் உருவானபின்னர் எழுதப்பட்ட வரலாற்றையே நாம் நவீன வரலாறு என்கிறோம்.*

*முந்தைய வரலாறை உண்மையில் வரலாறுகள் என்றுதான் சொல்லவேண்டும். ஒரு குழுவுக்கு, ஒரு பகுதிக்கு என எழுதப்பட்ட தனிவரலாறுகள் அவை. அந்தக்குழுவும் அப்பகுதியும் ஏற்றுக்கொள்ளக்கூடிய வரலாற்றுச்சித்திரங்கள் . அவ்வரலாறுகள் மூலம் அக்குழுவோ அப்பகுதியோ ஒருங்கிணைக்கப்பட்டு நிலைநிறுத்தப்பட்டிருக்கும்.*

*இத்தகைய வரலாறுகளுக்குரிய இரண்டு இயல்புகள் இரண்டு. இவற்றுக்கு புறவயத்தன்மை கிடையாது. அவ்வரலாற்றை எழுதிக்கொண்டவர்கள் அதை நம்புகிறார்கள், அவ்வளவுதான். உதாரணமாக, தமிழகத்தின் கணிசமான சாதியினர் அவர்கள் காவேரிப்பூம்பட்டினத்தைச் சேர்ந்தவர்கள் என்று சொல்கிறார்கள். அதற்குப்புறவய ஆதாரமே இல்லை*

இன்னொன்று, அவற்றுக்கு பிறவரலாறுகளுடன் இசைவு கிடையாது என்பது அவை தங்கள் எல்லைக்குள் மட்டுமே செல்லுபடியாகும். உதாரணமாக, திருவிதாங்கூர் அரசு நூறுவருடம் முன்புவரை வெளியிட்ட வரலாற்றுநூல்களில் எல்லாவற்றிலும் திருவிதாங்கூர் ராணுவம் அடைந்த ராணுவத்தோல்விகள் எல்லாமே வெற்றிகளாகவே சித்தரிக்கப்பட்டிருக்கும்.

நவீனவரலாற்றின் இரண்டு அடிப்படை விதிகள் இவற்றுக்கு நேர் எதிரானவை. புறவயமாக நிரூபிக்கப்படமுடியாதவை வரலாறே அல்ல. ஒருவரலாறு பிற வரலாறுகளுடன் எந்த அளவுக்கு ஒத்துப்போகிறது என்பதுதான் அதை மதிப்பிடும் அளவுகோல். ஒரு வட்டார வரலாறு அப்பகுதியின் பொதுவரலாற்றுடன், உலகவரலாற்றுடன் ஒத்துப்போயாகவேண்டும். உலகளாவிய ஒரே மானுடவரலாற்றின் பகுதியாக எது அமைகிறதோ அதுவே நவீன வரலாறு.

அத்தகைய நவீன வரலாறு நமக்கு பதினெட்டாம்நூற்றாண்டில்தான் உருவாகியது. நம்மிடமிருந்த பழைய வரலாறுகளை மதவரலாறுகள், குலவரலாறுகள் என்று பிரித்துக்கொள்ளலாம்.

சைவம், வைணவம் ஆகிய இரு பெருமதங்களுக்கு தெளிவாகவே எழுதிவைக்கப்பட்ட வரலாறுகள் இருந்தன. புராணம் என்பவை ஒருவகை வரலாறுகளே. புராணம் என்ற சொல்லுக்கே பழையவரலாறு என்றுதான் பொருள். சைவநாயன்மார்களின் கதைகளும் தலபுரணங்களும் சைவத்தின் வரலாறு . குருபரபம்பரைக் கதைகளும் கோயிலொழுகுகளும் வைணவத்தின் வரலாறு.

அதேபோல தமிழகத்தின் குறிப்பிடத்தக்க குலங்களுக்கெல்லாம் ஒருவகையான குலவரிசை வரலாறுகள் நூல் வடிவிலோ வாய்மொழியாகவோ பேணப்பட்டன. இவ்வளவுதான் நமக்கிருந்த வரலாறு

பத்தொன்பதாம் நூற்றாண்டில்தான் நமக்கு மேலைநாட்டு பாணியிலான வரலாற்றெழுத்துமுறை அறிமுகமானது. அந்த வரலாற்றெழுத்துமுறையின் வழிமுறைகள் நான்கு. .

*1. ஒரு நிலப்பரப்பின் வரலாற்றை ஒட்டுமொத்தமாக எழுதுவது. குலவரலாறுகள், மதவரலாறுகள் போன்ற அனைத்தையும் அதை எழுதுவதற்கான அடிப்படைத்தரவுகளாக மட்டுமே கருத்தில்கொள்வது*

*2. புறவயமான ஆதாரங்களின் அடிப்படையில் பொதுவான வரலாற்றை அளிப்பது. ஊகங்கள், வாதங்கள் அனைத்துமே புறவயத்தன்மைகொண்ட தரவுகளைச் சார்ந்தே நிகழவேண்டுமென விதித்துக்கொள்வது*

*3. அரசியல் வரலாற்றுக்கு முக்கியத்துவம் கொடுத்து பண்பாட்டுவரலாற்றை அதன் ஒரு பகுதியாகவே காண்பது. வரலாற்றை ஒரு தனித்த துறையாகக் காண்பது. ஆகவே வரலாற்றுடன் அறவியலையோ தத்துவத்தையோ கலக்காமலிருப்பது*

*4. ஒரு வரலாறு என்பது ஒட்டுமொத்த உலகவரலாற்றின் பகுதி என்ற பிரக்ஞையுடன் வரலாறுகளை இணைத்துக்கொண்டே செல்வது.*

*இந்த நான்கு அடிப்படைகளுடன் தமிழ்பேசிய நிலத்தின் ஒட்டுமொத்தமான வரலாற்றை எழுதுவதற்கான முயற்சிளை ஆரம்பத்தில் தமிழ்நாட்டை ஆட்சிசெய்யவந்த வெள்ளைய அதிகாரிகள்தான் மேற்கொண்டார்கள். தாங்கள் ஆளும் நிலத்தின் வரலாற்றை புறவயமாக எழுதி தொகுத்துக்கொள்வது ஆட்சி செய்வதற்கு அவர்களுக்கு அவசியமானதாக இருந்தது. ஒவ்வொரு மாகாண ஆட்சியாளரும் தன்னுடைய அடுத்த ஆட்சியாளரின் புரிதலுக்காக ஒரு ஆட்சிக்க்குறிப்பு எழுதி விட்டுச்செல்லும் வழக்கம் இருந்தது. அவ்வாறு எழுதப்பட்ட குறிப்புகளிலேயே தமிழக வரலாற்றை நவீன அணுகுமுறையுடன் தொகுத்து எழுதுவதற்கான தொடக்க கால முயற்சிகள் உள்ளன.*

*தமிழகத்தின் முக்கியமான மாகாண ஆட்சிக்குறிப்புகளில் முதலில் வந்தது 1868ல் ஜெ.எச்.நெல்சன் எழுதிய மதுரை மாவட்ட ஆட்சிக்குறிப்பு [J.H.Nelson in 1868] ஆகும்.தென்னாற்காடு -ஜெ.எச்.ஹாரிசன் [ J.H.Garstin 1878] திருச்சி- லூயுஸ் மூர் [Lewis Moore 1878] செங்கல்பட்டு -சி.எஸ் கரோல் [C.S.Crole 1879] திருநெல்வேலி -ஏ.ஜே.ஸ்டுவர்ட் [A.J.Stuart 1879] நீலகிரி -எச்.பி. கிரிக் [H.B.Grigg 1880] வட ஆற்காடு -ஆர்தர் எஃப் ஃகாக்ஸ் [Arthur F.Cox 1881] சேலம்- எச் . ஃபானு [H.Le Fanu 1883] தஞ்சை -டி.வெங்கடசாமி [(T.Venkataswamy 1883] கோவை- எஃப் ஏ நிக்கல்சன் [F.A.Nicholson 1887] ஆகியோரின் ஆட்சிக்குறிப்புகள் வெளிவந்தன.*

இந்தஆட்சிக்குறிப்புகளில் இந்த ஆட்சியாளர்கள் அந்தந்த இடங்களின் சுருக்கமான வரலாறை அங்கே கிடைத்த நூல்களில் இருந்தும் பல்வேறு வட்டார வரலாறுகளில் இருந்தும் தொகுத்து எழுதியிருந்தார்கள். தமிழகத்தின் பல்லாயிரக்கணக்கான ஆண்டு வரலாற்றில் மொத்த தமிழ்நிலத்தையும் உள்ளடக்கி ஒட்டுமொத்தமாக அணுகி எழுதப்பட்ட அரசியல் வரலாறு என்பது இந்த ஆட்சிக்குறிப்புகள் வழியாக உருவாக்கப்பட்ட வரலாறுதான். சொல்லப்போனால் அதன்பின்னர் தமிழகத்தில் இன்றுவரை எழுதப்படும் எல்லா வரலாறுகளும் இந்த முன்னோடிகள் உருவாக்கிய ஒட்டுமொத்த வரலாற்று வரைபடத்தை மேலும் துல்லியமாக்கவும் முழுமையாக்கவும்தான் முயல்கின்றன

**இந்திய வரலாற்றெழுத்தின் இரு முகங்கள்**

இந்திய வரலாற்றெழுத்தின் இரு முகங்கள் எப்போதும் ஆய்வாளர்களால் சுட்டிக்காட்டப்படுகின்றன. அவற்றை கருத்தில்கொண்டபடித்தான் நம் வரலாற்றைப்புரிந்துகொள்ள முயலவேண்டும்.

ஆரம்பகால இந்தியவரலாறு இந்தியாவை ஆட்சி செய்த ஆங்கிலேய அதிகாரிகளாலும், ஆய்வாளர்களாலும், சில மதப்பரப்புநர்களாலும் எழுதப்பட்டது. அவர்கள்தான் புறவயமான வரலாற்றின் ஒரு முன்வரைவை உருவாக்கினார்கள். அவர்களுடைய பார்வையில் ஆதிக்கநோக்கு இயல்பாகவே கலந்திருந்தது. பெரும்புகழ்பெற்ற ஜே.எச்.நெல்சனின் வரலாற்றுக்குறிப்புகளில் கூட இந்தியப் பண்பாட்டைப்பற்றிய மெல்லிய கிண்டலையும் சிற்சில சாதிகளைப்பற்றியும் ஆசாரங்களைப்பற்றியும் இடக்கையும் காணமுடிகிறது.

இந்த ஆதிக்கவரலாற்றுக்கு எதிரான மனநிலை இந்திய வரலாற்றாசிரியர்களிடம் உருவானது. அதற்கு இந்தியாவில் உருவாகி வந்த தேசிய இயக்கம் ஊக்கம் அளித்தது. இந்தியாவின் வரலாற்றை இந்தியர்களின் கோணத்தில் எழுதவேண்டும் என்ற எண்ணம் 1900த்தின் தொடக்கத்தில் இந்தியா முழுக்க பரவலாகவே உருவானது. பிரிட்டிஷ் ஆட்சியாளர்களின் பார்வையை காலனியாதிக்க வரலாறு என்றும் இந்திய வரலாற்றாசிரியர்களின் பார்வையை தேசியவரலாறு என்றும் குறிப்பிடும் வழக்கம் உருவானது

பிரிட்டிஷ் வரலாற்றாசிரியர்கள் இந்தியாவின் கடந்தகால வரலாற்றை ஆதிக்கம்,போராட்டம் ஆகியவற்றின் களமாகவே கண்டார்கள். இந்தியப்பெருநிலம் ஆரியர்கள, குஷானர்கள், ஹூணர்கள், மங்கோலியர்கள், ஆப்கானியர், முகலாயர் ஆகிய அன்னியப்படையெடுப்பாளர்களின் வேட்டைக்காடாகவே எப்போதும் இருந்தது என்பது அவர்களின் பார்வை. இங்கிருந்த மக்கள் சமூக ரீதியாக பல இனங்களாகவும் சாதிகளாகவும் சிற்றரசுகளாகவும் பிரிந்து அந்த உட்பூசல்கள் காரணமாக படைஎடுப்புகளை தடுக்கும் திராணியற்றவர்களாக இருந்தனர் என்று அவர்கள் சொன்னார்கள். ஒட்டுமொத்தமாக இந்திய வரலாறே அன்னிய ஆதிக்கத்தின் வரலாறுதான் என்ற பார்வை அவர்களிடமிருப்பதைக் காணலாம்

நேர்மாறாக தேசியவரலாற்றாசிரியர்கள் இந்தியாவிலிருந்தது ஒரு பெரிய ஒருங்கிணைவுப்போக்கு என்று வாதிட்டார்கள். வெவ்வேறு அன்னிய ஊடுருவல்கள் இங்கே நிகழ்ந்திருந்தாலும் அனைத்தையும் உள்ளிழுத்து ஒருங்கிணைத்துக்கொள்ளும் வல்லமை இந்தியப்பண்பாட்டுக்கு இருந்தது என்று சொன்னார்கள். ஒருங்கிணைவு என்ற நோக்கில் அவர்கள் இந்தியவரலாற்றை அணுகினார்கள்.

ஆங்கில வரலாற்றாசிரியர்கள் இந்தியாவின் மீதான அன்னிய சக்திகளின் மேலாதிக்கத்துக்கு அதிக இடமளித்தபோது தேசிய வரலாற்றாசிரியர்கள் இந்தியாவின் பழங்கால வரலாற்றில் பொற்காலங்களைக் கண்டுபிடிக்க முயன்றார்கள். இந்தியா கடந்தகாலத்தில் அரசியலிலும் பொருளியலிலும் பண்பாட்டிலும் மகத்தான சாதனைகளை நிகழ்த்தியது என்றும் அந்த வெற்றிகளைக்கொண்டே இந்திய வரலாறு மதிப்பிடப்படவேண்டும் என்றும் சொன்னார்கள்.

ஒரே வரலாறு மீதான இரண்டு பார்வைக்கு உதாரணமாகச் சொல்லப்படவேண்டிய இரு நூல்கள் உள்ளன. விஜயநகரப்பேரரசின் எழுச்சி வீழ்ச்சி பற்றி ராபர்ட் சீவெல் Robert Sewell எழுதிய A Forgotten Empire – Vijayanagar: A Contribution to the History of India. விஜயநகரப்பேரரசு எப்படி தக்காண சுல்தான்களால் அழிக்கப்பட்டது என்பதை விரிவாகப்பேசுகிறது. ஆனால் சூரியநாராயண ராவ்[ B. Surya Narayana Rao ]எழுதிய The unforgotabel empire – History of Vijayanagar முதன்மையாக விஜயநகரரப்பேரசின் பண்பாட்டுச் சாதனைகளைப்பற்றிப் பேசுகிறது.

ஆங்கிலவரலாற்றாசிரியர்கள் தமிழகத்தைப்பற்றி எழுதியபின்னர் அவர்களின் ஆய்வை விரிவாக்கியும் பார்வையை மறுத்தும் எழுதப்பட்ட தேசிய வரலாறுகள் இங்கே

*எழுதப்பட்டன. நீலகண்ட சாஸ்திரி, சதாசிவப்பண்டாரத்தார், சீனிவாச சாஸ்திரி, சத்தியநாத அய்யர் போன்றவர்களின் வரலாறுகளில் தேசிய வரலாற்று நோக்கின் அம்சங்கள் உள்ளன. பல்லவர்கள் ஆட்சிக்காலமும் பிற்கால சோழர்களின் ஆட்சிக்காலமும் இவர்களால் பொற்காலங்களாக முன்வைக்கப்பட்டன*

*1930 களுக்குப்பின் இந்த தேசிய வரலாற்றுப்பரப்பில் இருந்து வட்டாரதேசிய வரலாறுகள் உருவாகி வந்தன. இந்தியதேசியபெருமிதத்தின் ஒரு பகுதியாக தமிழ் தேசியபெருமிதம் கட்டமைக்கப்பட்டது. தமிழ்நாட்டில் மிகச்சிறந்த தேசியவாதியும் சுதந்திரப்போராட்ட தியாகியுமாகிய எழுத்தாளர் கல்கியே இதன் முன்னோடி என்பதைக் காணலாம். அவர் நீலகண்ட சாஸ்திரி, சதாசிவப்பண்டாரத்தார் போன்றவர்களின் வரலாற்றுநூல்களில் இருந்து தமிழகத்தின் பொற்காலங்களை புனைவுகளில் சித்தரித்தார். பல்லவர் காலத்தை பொற்காலமாகச் சித்தரிக்கும் சிவகாமியின் சபதம், சோழர்காலத்தைப் பொற்காலமாகச் சித்தரிக்கும் பார்த்திபன் கனவு, பொன்னியின் செல்வன் போன்ற புனைகதைகள் பெரும்புகழ்பெற்றன.*

*இந்தப்புனைவுகளில் அண்டைமாநில பேரரசர்கள் எதிரிகளாகவும் கெட்டவர்களாகவும் சித்தரிக்கப்பட்டிருந்தாகள். உதாரணமாக கர்நாடகதேசியவரலாற்றின் மாபெரும் நாயகனாகிய இரண்டாம்புலிகேசி சிவகாமியின் சபதம் நாவலில் வில்லனாக காட்டப்பட்டார்.*

*பின்னர் தமிழகத்தில் ஏராளமான வரலாற்றுப்புனைகதைகள் எழுதப்பட்டன. 1980கள் வரை கிட்டத்தட்ட அரைநூற்றாண்டுக்காலம் தமிழகத்தில் வரலாற்றுப்புனைகதைகளை வாசிக்க மக்கள் பேரார்வம் காட்டினர். வரலாற்றுப்புனைவுகளை எழுதும் ஆசிரியர்கள் நட்சத்திரங்களாக கருதப்பட்டார்கள். அப்புனைவுகளில் பெரிதும் பேசப்பட்டவர்கள் சோழர்களே. பல்லவர்களும் பாண்டியர்களும் அடுத்தபடியாக பாராட்டப்பட்டனர்.*

*ஆனால் சேரர்களின் கதைகள் குறைவாகவே எழுதபப்ட்டன. தமிழகத்தின் பெரும்பகுதியை ஆண்ட நாயக்கமன்னர்கள் இன்று தமிழகத்தில் உள்ள ஆலயங்கள் ஏரிகள் நகரங்கள் சாலைகள் என பலவற்றையும் அமைத்து நவீன தமிழகத்தின் சிற்பிகளாகவே இருந்தாலும்கூட அவர்களைப்பற்றி தமிழில் பெரிய அளவில் புனைகதைகள் எழுதப்பட்டதில்லை. காரணம் சேரநாடு இன்று கேரளமாக தனிமாநிலமாக மாறிவிட்டது. நாயக்கர்கள் ஆந்திரப்பகுதியில் இருந்து வந்தவர்கள்*

*இந்தப்புனைகதைகள் அன்று இருந்த பொதுவான அரசியல்சூழலை காட்டுகின்றன. அன்று இந்தியதேசிய அடையாளத்தில் இருந்து தமிழடையாளத்தை பிரித்து எடுப்பதற்கான அரசியல் முயற்சி பெரிய அலையாக எழுந்து தமிழகத்தை நிறைத்திருந்தது. தமிழகத்தை திராவிட இன அடிப்படையில் தமிழ் மொழி அடைபப்டையிலும் அடையாளப்படுத்தும் போக்கு அரசியல் பண்பாட்டுத்தளத்தில் வலுவாக இருந்தது. அந்த அரசியலுடன் இந்தப்புனைகதைகள் இணைந்துகொண்டன. இவை தமிழ் மக்க்ளுக்கு அவர்களின் கடந்த கால வரலாற்றில் பொற்காலங்களை கண்டுபிடித்து சித்தரித்துக்காட்டின*

*இந்த அரசியல் 1900த்தின் தொடக்கத்தில் தமிழின் பண்டைய இலக்கியங்கள் பதிப்பிக்கப்பட்டபோது ஆரம்பித்தது. தமிழ்ப்பண்டைய இலக்கியங்கள் சம்ஸ்கிருதத்திலும் பிராகிருதத்திலும் கிடைக்கும் பண்டை இலக்கியங்களுக்கு நிகரான தகுதிகொண்டவை என்றும் அவற்றின் அளவுக்கே பழைமையானவை என்றும் பரவலாக வாதிடப்பட்டது. ஆகவே தமிழரின் சுயஅடையாளம் தனித்துவம் கொண்டது, தொன்மையானது என்ற வாதம் வலுப்பெற்று அரசியல் பண்பாட்டுத்தளத்தில் வலுப்பெற்றது.*

*ஆகவே தமிழ்ப்பண்பாட்டின் தொன்மையையும் தனித்தன்மையையும் கண்டுபிடித்து நிறுவவேண்டும் என்ற நோக்கிலேயே சங்க இலக்கியங்களும் பிற வரலாற்றுச்சான்றுகளும் ஆராயப்பட்டன. அந்த நோக்கத்தை நிறைவேற்றும்தன்மை கொண்ட முடிவுகளே வலுவாக முன்வைக்கப்பட்டன. இன்றும் நம் வரலாற்றாய்வுத்துறையில் வலுவாக இருக்கும் பொதுப் பார்வை இதுதான்*

*சமநிலை கொண்ட வரலாற்றுநோக்கு என்பது இந்தவகையான முன்முடிவுகள் இல்லாமல் வரலாற்றை அணுகுவதாகவே இருக்கும். இந்திய வரலாற்றை இன்று நாம் ஆராயும்போது எப்படி ஆங்கில ஆதிக்கச்சார்புடைய பார்வையையும் மறுபக்கம் தேசியச்சார்புடைய பார்வைகளை அடையாளம் கண்டுகொண்டு நடுநிலை பார்வையை எடுக்கிறோமோ அப்படியே தமிழகவரலாற்றை ஆராயும்போதும் தமிழ்ப்பெருமிதநோக்குள்ள பார்வையையும் கூடுதலாக அடையாளம் கண்டுகொள்ளவேண்டும்*

## *[3]*

**இலங்கை வரலாற்றை எழுதும்போது…**

*இந்தியத் துணைக்கண்டத்தின் வரலாற்றெழுத்தின் வரலாறும் அதன் இன்றைய போக்குகளும் இலங்கையின் வரலாற்றெழுத்துக்கும் பெரும்பாலும் பொருந்துவதாகவே இருக்கும். என்னுடைய எல்லைக்குட்பட்ட வாசிப்பில் இருந்து அத்தகைய ஒரு முன்வரைவையே நான் கொண்டிருக்கிறேன்.*

*இந்தியப் பெருநிலத்திற்கு இல்லாத ஒரு தனிச்சிறப்பு இலங்கைக்கு உண்டு. தெளிவாக எழுதப்பட்ட ஒரு குலவரலாற்று நூல் இலங்கைக்கு உள்ளது. இந்தியாவின் வரலாற்றிலேயே கணிசமான தருணங்களில் காலநிர்ணயம் மகாவம்சத்தை அடிப்படையாகக் கொண்டே உருவாக்கப்பட்டிருக்கிறது.*

*அதேசமயம், மகாவம்சம் ஒரு குலவரலாறு மட்டுமே. ஒரு குலம் தனக்காக எழுதிக்கொண்ட வரலாறு அது. சைவ நாயன்மார் வரலாறு போல. வைணவ குருபரம்பரை வரலாறு போல. அது நவீனவரலாறாக நீடிக்கமுடியாது. நவீன வரலாற்றின் மூலப்பொருளாக மட்டுமே அதைக் கணக்கில்கொள்ள முடியும். அதிலிருந்து நவீன வரலாறு எவ்வகையில் உருவாக்கப்பட்டது என்பது எப்போதும் முக்கியமான ஒன்று.*

*இலங்கையின் நவீன வரலாற்றெழுத்து அதைக் கைப்பற்றிய ஐரோப்பிய ஆட்சியாளர்களின் குறிப்புகளில் இருந்துதான் ஆரம்பிக்கிறது. போர்ச்சுக்கல், டச்சு, ஆங்கில ஆட்சியாளர்கள் இலங்கையை நிர்வாகம் செய்யும் நோக்குடன் அதை ஒற்றை ஆட்சிப்பரப்பாகக் கண்டு பொதுவரலாற்றை உருவாக்க முயன்று நவீன வரலாற்றுக்கான அடித்தளத்தை அமைத்தனர்.*

*இந்திய தேசிய இயக்கத்துக்கு நிகரானது என பலவகையிலும் சொல்லப்படவேண்டியது அநகாரிக தம்மபாலவின் தலைமையில் ஆரம்பித்த பௌத்த ஒருங்கிணைப்பு மற்றும் சீர்திருத்த இயக்கம். உலகமெங்கும் ஆரம்பித்த ‘செயல்படும் பௌத்தம்’ என்ற இயக்கத்தின் தொடக்கப்புள்ளி அதுதான். சிங்களதேசியத்தின் தொடக்கம் அது. அது*

*அடிப்படையில் மதவாதத்தையும் இனவாதத்தையும் கொண்டிருந்தமையால் பிற மத,இன மக்களை உள்ளடக்க முடியாத குறுகிய தேசியவாதமாக ஆகியது.*

*இந்த சிங்களதேசியவாத நோக்கு இலங்கையின் வரலாற்றை எவ்வாறு எழுதியது என்பது இலங்கைவரலாற்றை ஆராயும்போது முக்கியமாகக் கவனிக்கப்படவேண்டியது. அந்த சிங்களத் தேசியவாதத்துக்கு மாற்றாக எழுதப்பட்டது தமிழ்த்தேசியவாத வரலாறு. அது தமிழ்த்தொன்மையின் அடையாளங்கள், சோழர்காலப்படையெடுப்பு குறித்த வரலாற்றுத்தரவுகள் மற்றும் பிற்கால இலங்கைத் தமிழ் மன்னர்களின் வரலாற்றைத் தொகுத்து தனக்குரிய வரலாற்றை எழுதிக்கொண்டது*

*இன்றைய சூழலில் இவ்விரு வரலாறுகளும் ஒன்றுடன் ஒன்று ஒத்துப்போகாதவையாக, மறுப்பவையாகவே உள்ளன. அரசியல்நோக்குடன் உருவாக்கப்பட்ட எல்லைக்குட்பட்ட வரலாறுகள் என்றே இவற்றைச் சொல்லவேண்டியிருக்கிறது. ஒரு நவீன வரலாறு மேலும் மேலும் புறவயமானதாக ஆகிக்கொண்டிருக்கும் என்றும் அதன்வழியாக பிறவரலாறுகளுடனும் பொதுவான மானுடவரலாற்றுடனும் அதன் ஒத்திசைவு வலுப்பெற்றபடியே செல்லும் என்றும் நாம் நினைவில்கொள்ளவேண்டியிருக்கிறது.*

**வட்டாரவரலாறுகளின் காலம்**

*தமிழகவரலாறு இன்றுகூட மூன்றில் ஒன்றே எழுதப்பட்டிருக்கிறது என்பதுதான் உண்மை. சங்ககாலத்தைப்பற்றி நமக்கு இலக்கியச்சித்தரிப்புகளை ஒட்டிய ஒரு மனச்சித்திரம் மட்டுமே உள்ளது. மிகச்சில கல்வெட்டு ஆதாரங்கள்தான் கிடைத்துள்ளன. சிலமன்னர்களின் பெயர்களைக்கொண்டு ஒருசில வம்சவரிசைகள் போடப்பட்டுள்ளன. அதன்பின் களப்பிரர்காலம், இன்றும் ஆய்வாளர்களால் விளக்கப்படாத ஒன்றாகவே எஞ்சுகிறது. சரியாகச் சொல்லப்போனால் தமிழக வரலாறு ஆதார பூர்வமாக எழுதப்படுவது சிம்மவிஷ்ணுப் பல்லவனின் காலத்துக்குப்பிறகுர்தான்.*

*அதன்பின்னர்கூட சேரர் வரலாறு எழுதப்படாததாகவே கிடக்கிறது. பிற்காலப் பாண்டியர் வரலாறின் பல பகுதிகள் முறையாக எழுதப்படவில்லை. இஸ்லாமியப்படைஎடுப்புக்குப்பின்புள்ள சுல்தானிய ஆட்சிக்காலம் எழுதப்படவில்லை. இந்த இடைவெளிகள் தமிழகவரலாற்றை எழுதிய ஆரம்பகால முன்னோடிகள் போதிய தரவுகள் இல்லாதகாரணத்தால் விட்டுவிட்டவை. அவை நிரப்பப்படவேயில்லை.*

*தமிழகவரலாற்றாய்வு ஒரு முட்டுச்சந்தில் முட்டி நிற்கிறது என்ற உணர்வே பண்பாட்டுக்களத்தில் செயல்படுபவர்களுக்கு இருக்கிறது*

*இந்தத் தேக்கத்தை உடைப்பதற்கான முக்கியமான வழிகள் மூன்று. ஒன்று, தமிழக வரலாற்றை இந்தியாவின் பிறபகுதிகளில் எழுதப்படும் வரலாற்றெழுத்துடன் இணைத்து விரிவாக்கம் செய்வது. உதாரணமாக நம்முடைய வரலாற்றில் இருநூறாண்டுக்காலத்தை நிறைத்திருந்த களப்பிரர் ஆட்சிக்காலத்தை பிராகிருத மொழி இலக்கியங்களுடனும் சமணர்களின் ஆவணங்களுடனும் ஆந்திரத்தின் சாதவாகனர் ஆட்சிக்கால வரலாற்றுடனும் இணைத்து விரிவான ஆய்வுகள் செய்வதன்மூலம் எழுதிவிடமுடியும்.*

*இரண்டாவதாக, இன்றைய நவீன ஊடகவசதிகள் மூலம் கிடைக்கும் சர்வதேச ஆவணங்களைக்கொண்டு தமிழக வரலாற்றை முழுமைசெய்ய முடியும். இன்று பல்வேறு ஐரோப்பிய மொழிகளில் எழுதப்பட்ட ஜெசூட் பாதிரியார்களின் குறிப்புகள் ஏராளமாக கிடைக்கின்றன. இவற்றைக்கொண்டு தமிழகவரலாற்றின் விளக்கப்படாத இடங்களை விளக்கும் பெரும்பணி எஞ்சியிருக்கிறது*

*மூன்றாவதாக, வட்டாரவரலாறுகளைக் கொண்டு தமிழகவரலாற்றின் இடைவெளிகளை முழுமை செய்யமுடியும். வட்டாரவரலாறுகளை நுண்தகவல்களைக்கொண்டு உருவாக்கி அவற்றை மையவரலாற்றுடன் பொருத்துவது இன்றைய வரலாற்றெழுத்தின் முக்கியமாக செயல்பாடாகும். நுண்வரலாறுகளைக்க்கொண்டு [micro history] பெருவரலாற்றை பரிசோதிப்பதும் விளக்குவதும் இன்று உலகமெங்கும் நிகழ்ந்துகொண்டிருக்கிறது. தமிழகத்தில் வேகம்பிடித்தாகவேண்டிய ஒரு அறிவுத்துறை இது.*

*சென்னைப்பல்கலைகழகத்தால் 1956ல் வெளியிடப்பட்ட எம்.ஆரோக்கியசாமி அவர்கள் எழுதிய கொங்குவரலாறு [ M.Arokiaswamy ,The Kongu Country] தமிழகவரலாற்றில் ஒரு முக்கியமான நூல். அந்தக்காலகட்டத்தில்தான் தமிழகவரலாறே ஒருவாறாக இன்றையவடிவை நோக்கி எழுதப்பட்டு வந்து கொண்டிருந்தது. அக்காலகட்டத்திலேயே வட்டாரவரலாற்றை எழுதுவதற்கும் முன்னோடியாக அமைந்தது ஆரோக்கியசாமியின் நூல். அதற்குமுன்பு கால்டுவெல் எழுதிய திருநெல்வேலிவரலாறு வரலாறு [ Robert CaldwellA Political and General History of the District of Tinnevelly, in the Presidency of Madras. 1881] முக்கியமான ஒரு தொடக்கம் என்றாலும் ஆரோக்கியசாமியின் நூல் ஒட்டுமொத்தமான தேசிய வரலாற்றின் ஒரு பகுதியாகவும், அதை மேலும் நுட்பமாக ஆக்குவதாகவும் அமையக்கூடிய வட்டார வரலாற்றெழுத்துக்கான மிகச்சிறந்த முன்னுதாரணமாகும்.*

ஆனால் அதன்பின்னர் அத்தகைய வட்டாரவரலாறுகள் அதிகம் எழுதப்படவில்லை. 2003ல் அ.கா.பெருமாள் குமரிமாவட்டத்தின் வரலாற்றை ஆய் மன்னர்களின் காலம்தொட்டு சுதந்திரம் வரை விரிவாக எழுதினார். தென்குமரியின் கதை என்ற பேரில் வெளிவந்த அந்நூலின் உருவாக்கத்துடன் நானும் சம்பந்தப்பட்டிருந்தேன் [தென்குமரியின் கதை, தமிழினி வெளியீடு] அதையொட்டி தமிழகத்தின் அத்தனை பகுதிகளுக்கும் அப்படியொரு வரலாற்றை எழுதி வெளியிட தமிழினி முயன்றதென்றாலும் எழுத ஆளில்லாமல் அம்முயற்சி தடைபட்டது.

வட்டார வரலாறுகளை எழுத நாட்டாரியல் பெரிதும் கைகொடுக்கிறது. வரலாற்றாய்வுக்கான கறாரான புறவய நோக்குடனும் வரலாற்றெழுத்தின் முழுமைநோக்குடனும் இணைகையில் வாய்மொழி வரலாறுகளும் தொன்மங்களும் எல்லாம் பயனுள்ள வெளிச்சங்களை அளிக்கமுடியும். அவ்வாறு இந்தியாவை ஆராய்வதற்கான கோட்பாட்டு ரீதியான வழிகாட்டலாக டி.டி.கோசாம்பியின் ஆய்வுகள் உள்ளன.

அதேபோல இனக்குழுக்களின் வரலாறுகளும் ஒரு விரிந்த கோட்பாட்டுப்பார்வையுடன் தொகுக்கப்பட்டால் பெருவரலாற்றின் இடைவெளிகளை நிறைவுபடுத்துபவையாக ஆகமுடியும். இப்படிச் சொல்லலாம். நவீன வரலாறு எழுதப்பட்ட தொடக்ககாலத்தில் வட்டாரவரலாறுகளும் இனக்குழு வரலாறுகளும் தொகுக்கப்பட்டு அவற்றின் பொதுவான அம்சங்கள் மட்டும் கருத்தில்கொள்ளப்பட்டு பொதுவரலாறு எழுதப்பட்டது. இன்று அந்தப்பொதுவரலாற்றின் விதிகளையும் வழிமுறைகளையும் கொண்டு வட்டார வரலாறுகளும் இனக்குழு வரலாறுகளும் மீண்டும் எழுதப்படவேண்டிய காலம் வந்துள்ளது.

யாழ்ப்பாணக் குடாநாட்டில் உள்ள மன்னார், முல்லைத்தீவு, வவுனியா மற்றும் கிளிநொச்சி பகுதிகள் வன்னி என்று சொல்லப்படுகின்றன. இப்பகுதிக்கு நெடுங்காலமாகவே சிங்கள அரசுகளுடன் தொடர்பற்று தனித்த ஆட்சிமுறை இருந்த வரலாறு உள்ளது. வன்னிமை என்று சொல்லப்படும் ஆட்சிமுறை இருந்தமையால் அப்பெயர் அதற்கு வழங்குகிறது. இது குமரிமாவட்டத்தில் இருந்த மாடம்பிகள் போன்ற சிறுநிலப்பிரபுக்களின் தனியதிகாரத்துக்குச் சமானமானது.

வன்னியின் வரலாற்றை எழுதும் முயற்சி என்பது உலகமெங்கும் நிகழ்ந்துவரும் வட்டாரவரலாற்றெழுத்து என்னும் மாபெரும் பண்பாட்டுநடவடிக்கையின் ஒரு

*பகுதியாக அதன் விதிகள் மற்றும் நோக்குகளுக்கு ஏற்ப நிகழவேண்டும். அது இலங்கைவரலாற்றில் புதிய வெளிச்சத்தை உருவாக்கமுடியும். தொலைதூரப்பார்வையில் இந்தியவரலாற்றையும் ஆசியவரலாற்றையும் கூட விளக்கும்தகுதி பெறமுடியும்*

***வரலாற்றின் முன்***

*இன்றைய நவீன வரலாற்று மாணவன் ஒருவன் இலங்கையின் தொல்வரலாறு என்ன, அதன் நவீன வரலாறு அந்தத்தொல்வரலாற்றில் இருந்து எவ்வாறு பதினெட்டாம்நூற்றாண்டுக்குப்பின் உருவாக்கப்பட்டது, அதில் ஓங்கியிருக்கும் தரப்புகள் என்ன என்பதைக் கருத்தில்கொண்டே அவ்வரலாற்றை எழுதவேண்டும்.*

*கூடவே ஒரு வட்டாரத்தின், மக்கள்திரளின் வரலாறை எழுதும்போது வெறுமே அகவயமான காரணிகளை மட்டும் கண்டுகொள்வதும் பெருமிதங்களை பயிரிடுவதும் தவிர்க்கப்படவேண்டும். வரலாற்றை சமூக, அரசியல்,பொருளியல் காரணிகளுடன் இணைத்து முழுமைசெய்யும் பார்வை எப்போதும் செயல்பட்டாகவேண்டும். அந்த முழுமையான பார்வை இல்லாத வரலாற்றெழுத்துகளை ஒருபோதும் வரலாறு என ஏற்றுக்கொள்ளலாகாது*

*கடைசியாக, வரலாறு என்பது பலகோணங்களில் பலர் ஆராய்ந்து ஒருவரோடொருவர் முரண்பட்டும் முழுமைசெய்தும் உருவாக்கி எடுக்கக்கூடிய ஒன்று என்ற பிரக்ஞை நமக்கிருக்கவேண்டும். அந்நிலையில் வரலாற்றுவிவாதத்தில் வெற்று உணர்ச்சிவேகங்களுக்கு எந்தவகையிலும் இடமில்லை. எந்தவகையான வரலாற்றுக் கோணம் முன்வைக்கப்பட்டாலும் சரி, அது விவாதத்துக்குரியதே ஒழிய வெறுப்புக்குரியயதல்ல. வெறுப்பின், நிராகரிப்பின், கோபத்தின் குரலை எழுப்பும் எவரும் வரலாற்றுவிவாதங்களில் இருந்து முழுமையாகவே ஒதுக்கப்பட்டாகவேண்டும்.*

*அத்தகைய முழுமையான ,சமநிலைகொண்ட ஆய்வுகள் வழியாக நம் வரலாற்றை நாம் எழுதிக்கொள்வது நம்மை நாம் அறியமும் உலகசித்திரத்தில் நம்மை பொருத்திக்கொள்ளவும் இன்றியமையாதது.*

**********